# அன்னையின் மகன்

பொருளடக்கம்

# அன்னையின் மைந்தன்





அன்னையின் தாலாட்டுக் கேட்டு அன்று
பூவாய் மலர்ந்த செவிகள் -இன்று
வசைகேட்டு வாடிச் சோர-அன்னை ஆசையோடு
தூக்கித் தழுவிய பொன்மேனி, கசை கிழித்து
ஏர் உழுத நிலமாய்க் காட்சி தர, மனுமகனைச்
சிதைத்த மதவாதக் கொடுமைதான் என்னே!

கழுமரம் சுமந்த தோள்கள் கன்றிச் சிவந்திருக்க
மதிமுகம் எனத் தாய் போற்றிய திருமுகம்
முள்முடி தைத்துச் சிதைந்திருக்க
அங்கம் தைத்த ஆணிகளில் தொங்கிய புனிதம்
வைதாரையும், வதைப்போரையும் மன்னிக்கத்
தந்தையை வேண்டிய அன்பின் அவதாரம்

என் தந்தையே! என் தந்தையே!
ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்!
கதறிய பிள்ளை மனம்-கடைசியில்
என் ஆவியை உம்மிடம் கையளிக்கிறேன்
பரிபூரண சரணாகதியில் தன்னுயிரை
தந்தையிடம் கையளித்து சச்சிதானந்துடன்
ஒன்றான சுத்த சைதன்யம்





இறப்பை உறுதி செய்ய மரித்த பின்னும்
இதயத்தைக் குத்தித் திறந்த குரூரம்
இருபுறமும் கூரான வாளோ-அன்னை
இதயத்தை ஊடுருவிய துயரம்

புண் சுமந்த உடல் அன்னை மடியில் ஓய்வெடுக்க
பண் சுமந்த ஒப்பாரியை தாய் மனம் இசைக்க
கண் சுமந்த துயரை கண்டவர் விழிநீர் சொல்ல
கல்வாரியில் நிகழ்ந்த மதப்படுகொலையோ கொடூரம்

தன் அமைதியை அருமைச் சீடருக்கு
இறைகொடையாய் அளித்த புனிதன், ஆடையையும்,
அன்னையையும் கடைசியாய் வழங்கிய மாமனிதன்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நல்மனத்தவருக்கு அமைதி-வானவர் மொழிந்த
இயேசு பிறப்பின் நற்செய்தி



ஆணவம் கழிந்திடத் தோன்றும்
தூய மனமே உன்னதம்-
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்,
எளிய மனத்தவருக்கே இறையரசு
மலைப்பொழிவாய்
திருவாய் மலர்ந்தருளிய மந்திரம்

உள்ளுணர்வின் உன்னதமே நான்
ஆபிரகாமிற்கு முன் ‘‘நான்’’ இருக்கிறேன்
வழியும், உண்மையும் வாழ்வும் ‘‘நானே’’
முழங்கிய மனுவுருவான இறை வார்த்தை



அந்நியனாய், அஞ்சத்தக்கவராய், அறியப்படாதவராய்
வாழும் இறைவனை,அப்பா, தந்தாய் என்றழையுங்கள்
நீங்கள் தெய்வங்கள், எல்லோரும் உன்னதரின் புதல்வர்கள்
நம்மை அறியும் மெய்யறிவே ஞானம் என்ற அன்பு மகன்

என்னைக் காண்பவர் தந்தையைக் காண்கிறார்
நானும், தந்தையும் ஒன்றே என்ற ஓங்காரம்
மனுக்குலம் ஒளியாய், உப்பாய் மாறிட
மனுவுருவான இறைவார்த்தையோ அவதாரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-8-10-2024*

# அமைதியைத் தேடி




எரிந்தும் எரியாத முட்செடியில்
சக்தியும், சடமுமான இருப்பின் பிரசன்னம்
இருப்பவர் நாமே என்ற உன்னதப் பிரகடனம்

கருகாத முட்செடியில் கருணையின் மாட்சி
கருகும் ஊர்களிலும், உயிர்களிலும்
மதப்பயங்கரவாதத்தின் ஆட்சி

அன்பின் வீழ்ச்சியில் பகைமையின் எழுச்சி,
அன்பு மனங்களை நஞ்சாக்கும் கொடிய முயற்சி
வன்முறையே நீதி என்ற மதவாதப் புரட்சி



அகிம்சையின் அஸ்தமனத்தில் இம்சையின்
உதயம், அமைதியோ கிட்டாத வரம்
எட்டாத நிலவான சாபம், மதப்பயங்கரவாதம்
மனங்களை ஆட்கொண்ட பாவம்

தொடரும் போரில் தொடர்ந்து சிந்தும் குருதி
அழுகையும், தொழுகையுமான அன்னையர்
முகங்களில் வற்றாத கண்ணீரோ அருவி

ஆட்டுவிக்க மகுடி ஊதும் பிடரான் ஈரானின்
மாறாத நாதம் பயங்கரவாதம்-ஆடும்
நச்சரவங்களுக்கு அமைதி வேண்டாத கீதம்,
வாழும் காலமோ எரிநரகான யுகம்



அமைதியின் மதம் இஸ்லாமில் சுன்னி,
ஷியாவின் அலங்காரம் அலங்கோலம்,
மதப்பயங்கரவாதமோ புதிய கலாச்சாரம்
இஸ்ராயேலை அழிப்பதே வேதம்



இஸ்ராயேலை எரித்தழிக்க ஈரான் ஏவிய
இருநூறு ஏவுகணைகள்-வானில் சுட்டெரித்து
நாட்டைக் காக்க போராடும் படைகள்

கண்ணுக்கு கண், பல்லிற்குப் பல்
போராளிகளுக்கு வாழும் வேதமாக
யுத்தமே வெற்றியின் பாதை, அன்பு, கருணை,
இரக்கம் மன்னிப்பு. பெருமான்கள் புத்தர்,
இயேசு ஓதிய மாறாத அமைதியின் கீதை
யாருக்கும் வேண்டாத பாதை

இடியாய் முழங்கித் தீ மழை பொழியும் குண்டுகள்
உறவுகள் உயிரிழக்க, வாழிடங்கள் இடிபாடாக
நடைபாதையிலும், கடற்கரையோரங்களிலும்
கூடு கட்டிய நாதியற்ற லெபனான் அகதிகள்

நேற்றைய குடிமக்கள் இன்றோ அகதிகள்
நீதி கிட்டாத நிலையில், அமைதி எட்டாத வானில்
நம்பிக்கை நலிந்த நிலையில் இவர்களும்
நாளையப் போராளிகள், மதப்பயங்கரவாதிகள்?





மனிதம் பாதி, மிருகம் பாதி செய்த கலவை
இருமை கடந்தால் நம்முள் இருப்பதோ தெய்வீகம்
புத்தரும், நாம், இயேசு பெருமானும் நாம்,
நம்மை நாம் அறிந்தால் சச்சித்ஆனந்தம்

ஒருவர் புரிந்தால் கொலை
ஓராயிரம்பேர் ஒன்று திரண்டால் படை
யுத்தத்தில் கொலைகள் எல்லாம் வீரசாகஸம்
பதக்கங்களும், உயர் பதவிகளும் வரட்டு நியாயம்

ஐவேளைத் தொழுகை மாறவில்லை
அல்லாகு அஃக்பர் கோஷம் மறையவில்லை
போர் ஓயவில்லை, பாயும் குருதி நிற்கவில்லை
தாய்க்குலத்தின் கண்ணீர் காயவில்லை



அமைதியோ எட்டாத நிலவு-ஹமாஸ்
பயங்கரவாதிகள் கடத்திய யூதக் கைதிகளோ
கலைந்த வண்ணக் கனவு, மடிந்தவர்களோ
வெறும் எண்ணிக்கையான தரவு

பகைமையை பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினால் தணியுங்கள்-
என்றுமுள்ள தர்மம் இதுவே-
ஏஸ தம்மோ சனந்தனோ-(தம்ம பதம்)



தீமையை எதிர்க்க வேண்டாம்
எதிரியையும் அன்பு செய்யுங்கள்
பெருமான் இயேசு மொழிந்த வேதம்,
ஆணவம் கேட்க விரும்பாத நாதம்

அன்பு, உண்மை, கருணையாய் தர்மம்
அழுகையும் ஒப்பாரியுமாய்ச் சோகம்-உலக
சந்தையில் ஆயுதங்களுக்கு உச்ச விலை
மனித உயிர்களுக்கோ மலிவு விலை

அழிவுப் பாதையில் உலகம்
அமைதியோ மனிதம் காணாத மோட்சம்
யுத்தம் எழுதும் வரலாறு, ஆபேலின் இரத்தம்
இறைவனைக் கதறியழைத்தும் நீதி கிட்டாத பேறு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2024

# காதல் நிலவு





கண் பார்த்து நெஞ்செழுதிய காவியம்,
கண்வழி நுழைந்து நெஞ்சில் பதிந்த வண்ண ஓவியம்
கனவிலும், நனவிலும் இனம் புரியாத இன்பம்
நீயின்றி இன்றி நானில்லை என்ற பேரானந்தம்

நாம் இருவரல்ல ஒருவர்
வாழ்வது நான் அல்ல என்னில்
வாழ்வது நீயே மனம் பாடும் இதய கீதம்
வாழ்வோ தேவராகம்

உனக்குள் துடிப்பதோ என்னிதயம்,
எனக்குள் துடிப்பதோ உன் இதயம்
காதலோ பேரின்பம்,
வாழ்விலோ புது உதயம், காதலர் நாம்
இதுவரை காணாத புது வசந்தம்






கருவானில் ஒரு நிலவு-என் மனவானில்
நாளும் ஒளிரும் பெண்ணிலவு-நாளெல்லாம்
தேன் நிலவு, கைப்பிடித்த நாள் முதல்
வாழ்வோ வசந்தமான அற்புத நிகழ்வு

அழகோ கண்ணுக்கு விருந்து-கனிவாய்
அமுதோ தாகத்திற்கு மருந்து
மலர் மணமோ சுவாசத்திற்கு விருந்து
கன்னி உறவோ காதலுக்கு அருமருந்து

காந்தப்புலமாய் என்னைக் கவர்ந்த உறவு
காதல் புலமாய் என்னை ஆளும் உலகு
தாய்க்குப் பின் தாரமான வரவு-கனிந்த
காதலுக்கு வாழ்வோ தேன் நிலவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-07-10-2024

# கொள்கலம்

---

காஸாவிற்கு அனுப்பி வைக்கப்பட்ட கொள்கலம்
கண்ட மனங்களில் கவலையின் ஆறாத ரணம்,
நீலம்பாரிக்க நீலநிறப் பொலித்தீன்களில் பொதி செய்யப்பட்ட
எண்பத்தியெட்டு உடலங்கள், காணாமல் ஆக்கப்பட்ட
உறவுகளின் கண்களில் கண்ணீர் மழைக்காலங்கள்






உருக்குலைந்து நாறி மணந்த உடலங்கள்-சிந்தையில்
என் உறவோ? உன் உறவோ என்ற பீதிப்பிரலாபங்கள்,
மடிந்தவர் எல்லாம் நம் உறவு, கொல்பவரும்,
கொல்லப்படுபவரும் சகோதரர், உண்மையைக் காண
மதவாதம் இரும்புத் திரையான நிகழ்வு

பெற்ற வயிறுகள் பற்றி எரிய, பேதை நெஞ்சம்
என் கணவனோ எனக் கதறிப் புலம்பிட
என் தந்தையோ என அஞ்சும் குழந்தை
என் சகோதரனோ எனப் புலம்பும் உடன்பிறப்பு

கொல் அல்லாது கொல்லப்படுவாய் யுத்த நீதி,
கண்ணுக்கு கண், பல்லிற்குப் பல்
வேதம் சொன்ன பாடம்-எதிரியையும் அன்பு செய்
மாறாத இயேசு பெருமானின் அன்பின் கீதம்?






தொழுகையின்றி, அழுகையின்றி ஒன்றாய்
மண்ணில் புதைந்த உடலங்கள்
காயமான மனதில் காயாத சோகங்கள்
வாழ்வே மாயம் என்ற ஒப்பாரிகள்

உயிர்களையும், உழைத்துச் சேர்த்த
உடைமைகளையும் ஒன்றாய் அழிக்கும் யுத்தம்
மனிதம் சிதைந்து உணர்வழிந்து மிருகம் உயிர்க்க
மத்திய கிழக்கில் ஆறாய் ஓடும் மனித இரத்தம்



ஒக்டபசின் கொடுங்கோலத்தில் ஈரான்
உணர்சிக் கொடுக்குகளாய் ஹூ த்தி, ஹிஸ்புல்லா,
ஹமாஸ் எனப் பல பயங்கரவாதக்குழுக்கள்
பயங்கரவாதமே ஜிஹாத் என்ற அவல நிலைகள்

அமைதியின் மதத்தில் அச்சுறுத்தும்
மதப்பயங்கரவாதம்,
ஈரானின் மகுடியில் ஆடும் நச்சரவங்களாய்
உலகெங்கும் ஆயுதவாதம்

இஸ்ராயேலரின் இசை விழாவை கொலை விழாவாக்கிய
ஹமாஸ் பயங்கரவாதம், தொடரும் யுத்தத்தில்
கொல்லப்பட்ட காஸா, லெபனான் அப்பாவிகளோ
வெறும் எண்ணிக்கையான பரிதாபம்



சாதி,இன,மத,நிறங்களால் பிளவுண்ட மானுடம்,
பக்தி வரப் புத்தியிழந்த பரிதாபம், அன்பு,
உண்மை, கருணை சந்திக்காத அவலம்
வல்லமையே கடவுள் என்ற ஆணவ அஞ்ஞானம்



மண்ணால் மனிதனைப் படைத்து-உயிர் தரும்
ஆவியாய் தன்னை மனிதனுள் மறைத்த இறைவன்,
அறிவுக்கனியால் தோன்றிய ஆணவம் இரும்புத் திரையாக
அன்பிறைவன் நம்முள்ளே அறியாத அகக்குருடன்

பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினால் தணியுங்கள், என்றுமுள்ள
தர்மம் இதுவே-(தம்ம பதம்)இறைவா என்னை
என்றுமுள்ள உம் வழியில் நடத்தும் (சங்கீதம் 139:24)



கண்கள் காண்பதோ வெளியில், உருவற்ற
இறைவனைக் காண வேண்டியதோ தூய மனம்,
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
இருமை கடந்திட, மனமழிந்திட காலம் மறைந்திடும்,
இருப்போடு ஒன்றாக-சச்சித் ஆனந்தம் மலர்ந்திடும்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நல்மனத்தவருக்கு அமைதி, வானவர் சொல்லிய
இயேசு பிறப்பின் நற்செய்தி, உன்னதமும்,
நல்மனமும் ஒன்றே, அது நம்முள்ளே

கட உள் கடவுள் நீ-நீங்கள் தெய்வங்களே, உன்னதரின் புதல்வர்களே
ஆயினும் நீங்களும் மனிதர்கள்போல் மடிவீர்கள் கடவுளே
உலகில் எழுந்தருளும், நீதியை நிலைநாட்டும், ஏனெனில்
எல்லா நட்டவரும் உமக்கே சொந்தம் (சங்கீதம் 82:6-8)





தன்னை அறியும் அறிவே மெய்யறிவு-மற்றெல்லாம் தகவலறிவே
வாக்களிக்கப்பட்ட பூமி நாளும் யுத்தக் களமான துயரம்
கொள்கலனும் கொலைக்களமான அவலம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30-09-2024*

# மோட்சம்

---

அந்தி சாய்ந்த நேரம், அமைதி பூத்திருந்த
அழகிய புனித அன்னை மரியாள் ஆலயம்
செபத்தில் இலயித்திருந்து இறைவனைப் போற்றிப்
புகழ்ந்த குருவானவர் மனதிலோ ஆனந்த லயம்






நீ செய்த நன்மைகளை நினைக்கின்றேன்
நெஞ்சுருக நன்றி சொல்கின்றேன், தகுதியற்ற
என்னையும் உன் பணிக்காய்த் தேர்ந்தாய்
வாழும் நாளெல்லாம் ஆசீரால் நிறைத்தாய்

நெஞ்சமெல்லாம் நீயாக, என் சித்தம், நினைப்பு,
செய்கை எல்லாம் உனதாக, கொஞ்சி மகிழ-நீ
தந்த குழந்தைகளோ குபேரநிதி, அருந்தவமின்றித்
தாய் தந்தையாக என் நெஞ்சிலே ஆனந்த அமைதி

நன்றி சொல்ல வார்த்தையில்லை
உன் துதிபாடும் நெஞ்சில் உன்னைத் தவிர வேறு
எவருமில்லை, தள்ளாமையிலும் இறை துதிபாடும்
உள்ளம், இறையில்லம் என்பதில் ஐயமில்லை



பூக்களின் வாசத்தால் ஆலயம் எங்கும் நறுமணம்,
கைகூப்பி, கண்களை மூடித் தியானிக்க மனதிலே ஆனந்தம்
கண்களில் வழியும் கண்ணீரிலோ பேரின்பம்-எரியும்
மெழுகுவர்த்தியான வாழ்வோ இறைவனுக்கு அர்ப்பணம்



வயது எழுபதைக் கடந்த மனிதர்
வாழ்நாளெல்லாம் இறை தொண்டாற்றிய புனிதர்
வாழ்ந்தது போதும் தந்தையே-உம்மோடு
உம் வீட்டில் வாழ என்னை அழையும்

ஆலயமணி சட்டென்று ஒலிக்க-ஆவலோடு தட்டுத்தடுமாறி
வாயிலுக்கு விரைந்தவர் கண்டதோ யன்னல் ஓரம்
கட்டி வைத்த தொட்டிலில் தூங்கும் கைக்குழந்தை-
பெற்ற தாயால் கைவிடப்பட்ட மழலை

அங்குமிங்கும் நோக்கியும் யாரும் கண்ணுக்குத்
தென்படவில்லை-ஏந்திய குழந்தை உடலில்
பால்மணம் மாறவில்லை, அன்போடு முத்தமிட்டவர்
பணி தொடர, ஆண்டவனை வேண்டினார்

தள்ளாத வயதில் யாருமற்ற குழந்தைக்கு தாயும்
தந்தையுமாக வரம் தந்தாய், தந்தையே
இவன் வளர்ந்து பெரியவனாகும் வரைக்கும்
எனக்கு சக்தி கொடு, பின்னர்
என்னை உன்னிடம் அழைத்துக் கொள்

ஈன்ற குழந்தைகளை இயலாமையால் கைவிட்டு
சோகத்தில் கண்மறைந்து வாழும் இளந்தாய்கள்-வாழும்
காலமும் இருளாக அநாதைகளாய் துன்புறும் சேய்கள்



இருவரின் துயர் நீங்க ஆலயத்தில்
கட்டிய தொட்டில்-குழந்தையை தொட்டிலில்
இட்டு மணியை அடிக்க-குழந்தையோ மாதா, பிதா,
குருவாய் மாறும் தந்தையின் தாலாட்டில்

வாழ்நாளேல்லாம் கைவிடப்பட்ட குழந்தைகளை
தன் குழந்தைகளாய் ஏற்று வளர்த்த மாமனிதன்
துன்புறும் அன்னையர் விட்டுச் செல்லும்
குழந்தைகளை வளர்த்து ஆளாக்கும் புனிதன்

பல்லாண்டு சேவையில்-மாமனிதர் வளர்த்து ஆளாக்கிய
குழந்தைகள் பலநூறு, கிறிஸ்மஸ் பண்டிகை காலத்தில்
கூடும் உறவுகள் வாஞ்சையாய் தந்தை என அழைக்கும் உறவில்
நெஞ்சம் நெகிழ, வாழும் உறவில் தாய் தந்தையான அரும்பேறு



காலங்கள் செல்ல குழந்தையும் வளர்ந்து
பெரியவன் ஆகிட, தள்ளாடி ஆலயம் வந்த தந்தை
நெஞ்சுருக தந்தையே தளர்ந்த உடல் ஏங்குகிறது
உம்மோடு வாழ என்னை அழையும் ஜெபமானது



ஆனந்த அமைதி எங்கும் நிலவ, ஆனந்த ராகமாய்
குரல் கேட்டது, மகனே இத்தனை காலம்
எங்கு நீயிருந்தாயோ அதுவே மோட்சம்,கைவிடப்பட்ட
குழந்தைகளுக்கு உன்னால் கிட்டியதோ தேவகடாட்சம்

அன்பிருக்கும் இடத்தில் நான் இருப்பேன்-அன்புருவான
உன்னிதயமோ நான் வாழும் மோட்சம்,
இதைவிட வேறு மோட்சமில்லை
என் குழந்தை நீ என்றும் உன்னோடு நான்

தந்தையை தேடி வந்த அருட் கன்னியர் கண்களில்
ஆழ்ந்து உறங்குவதுபோல் அவர் தோற்றம்,
தொட்டு எழுப்பிட சரிந்த உடல், வானகம்போன
வயதான குழந்தை முகத்தில் மாறாத புன்முறுவல்



வானக வீட்டில் இறைவன் கட்டிய தொட்டிலில்
இன்று ஓர் குழந்தை,
வாஞ்சையோடு அள்ளி அணைத்து முத்தமிட்ட
இறைவன் விழிகளில் ஆனந்தக் கண்ணீர்

வா மகனே வா, வாழும் இல்லத்தை
மோட்சமாக்கினாய்
கைவிடப்பட்ட ஏழைக் குழந்தைகளுக்கு
தாயும் தந்தையுமாகினாய்

உன்னில் என்னைக் காண உன்னை
நீ அர்ப்பணித்தாய், உன் பணி புனிதம்,
உன்னோடு வாழ்வதோ எனக்கின்பம்
உன் இதயமே நான் வாழும் மோட்சம்

கண் மலர்ந்த குழந்தை கன்னங்குழிய சிரித்தது-
என் தந்தையின் இல்லத்தில் எல்லோருக்கும் இடமுண்டு
பலியை அல்ல இரக்கமே இறை விரும்பும் காணிக்கை
இறைவன் வேண்டுவது இன்றும் நிதரிசனமானது

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-07-10-2024

# இனிய பிறந்த நாள் வாழ்த்துக்கள்

---

**To Sanas, My Sister in Spirit** 🌙

On this day, a light was born,
A soul so pure, a heart adorned.
Through paths we walk, both near and far,
You've always been my guiding star.

Beyond the bounds of faith and name,
Our friendship grew, forever the same.
In every smile, in every prayer,
You’ve shown me love beyond compare.

With gentle words and kindness true,
A sister's bond I found in you.
May Allah's blessings grace your way,
And fill your heart on this, your day.

So here's my wish, as stars align,
For joy and peace, for love divine.
May all your dreams take flight, soar high,
My sister, my friend, beneath this sky.

---

Happy Birthday, Sanas! ⭐







**என் இனிய தங்கைக்கு**

உடன் பிறவாத் தங்கையாய் என்
உதிரத்தோடு கலந்த உறவு
ஆண்டுகள் பலபோனபின்பும், நட்போடு
உறவாடும் அன்பின் ஆனந்த வரவு

இனம், மதம் கடந்த அன்பு
இதயத்தை மகிழ்விக்க
வல்ல அல்லா
தந்த வரப்பிரசாதமான உறவு
அண்ணா என அழைக்கும் குரலில் பாசம்
பேசும் மொழியில் தங்கையின் நேசம்

பல்லாண்டு சிநேகம், பவித்திரமான நேசம்
தாயே நீ இன்னும் பல்லாண்டு வாழ
வாழ்த்தும் இதயத்தில்
அண்ணனின் பாசம்

இறை தந்த உறவு
எல்லாம் இன்ஷா அல்லா என்ற
மன நிறைவு
அன்பே தெய்வம் என்ற வாழ்வு
மாஷா அல்லா

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-01-10-2024

# சுபாவம்

---

வைகறையை வாழ்த்தி வரவேற்கும் புள்ளினத்தின் பூபாளமும்,
பூவினங்களின் கொண்டாட்டமும் மனதைக் கொள்ளை
கொள்ள-ஆனந்த நடைபோடும் கங்கை நதி
இளங்கதிரவனை வாழ்த்திடும் முனிகளின் துதி





ஓம்தத் ஸவிதுர்வரேணியம்
பர்கோ தேவஸ்ய தீ மஹி
தியோ யோ நः ப்ரச்சோயாத்

கங்கை நீரை இருகரங்களால் அள்ளி
சூரியனைத் துதித்த முனி யக்ஞவல்கியர் நெஞ்சில்
புத்திரபாக்கியம் இல்லை என்ற கவலை-வானில்
பறந்த கழுகிற்கு வானமே எல்லை என்ற உவகை

கிழக்கு வான் வெளுக்க எங்கும்
ஒளியின் மாட்சி, அன்ன நடைபோடும்
கங்கையில் நீராடிய மனங்களில்-புது நாளைத்
திருநாளாய் கொண்டாடும் மகிழ்ச்சி

மலர்ந்த விழிகள் எழும் சூரியனை வணங்க
விரிந்த மனம் காயத்திரி மந்திரத்தை ஓதித்துதிக்க
விரிந்த கரங்களுள் விழுந்த எலிக்குஞ்சு-பற்றிய இரையை
நழுவ விட்டு வானில் பறந்த கழுகுக் குஞ்சு

இறை தந்த பரிசென எண்ணி மகிழ்ந்த மனம்
எலிக்குஞ்சை அழகிய பெண் மகவாய் மாற்றிய தவம்,
தாரத்திற்கு மகவை தந்து குளிர்ந்த தந்தை மனம்
நம் குறை தீர்ந்தது என்ற தாய்மையின் குணம்





காலங்கள் கடந்திட, வசந்தங்கள்
வந்து போயிட, தத்தித் தவழ்ந்த பிள்ளை
பேதை, பெதும்பை, மங்கை கடந்து
மடந்தையாய் மாறி மணம் வீசிய முல்லை

பருவம் பூத்தாடும் மடந்தை மையளாவிய விழிகள்,
நெய் தடவிய பூங்குழல், மென் முலைகள்
நூலிடை, நூதன அழகில் அங்கமெல்லாம் தங்கமென
ஜொலிக்க பங்கயத்தின் அழகாய் மங்கை
பார்த்த காளையர் விழிகளில் காதலின் மயக்கம்
காமன் கணைபட்டு நோகும் மனங்களில் ஏக்கம்
காளையர் தொலைத்ததோ தூக்கம்

அடி தளிராக அங்கை மலராக, வாள் நுதலாக
கிள்ளை மொழியாக, அன்னம் நடையாக அழகிய திருமகள்,
கட்டிளம் காளையர் கண்டு மயங்கும் மதன காவியம்
பிரம்மன் எழுதிய நூதனப் பெண் ஓவியம்





நம் மகளா இவள், ஆனிப்பொன்னில் செதுக்கிய
அற்புதச் சிலையா இவள், வண்ணங்கொண்ட
மலராய் இவள், வடிவழகில் திருமகளா,
தந்தை எனக்கு பிரம்மன் தந்த பெருநிதியா?

நம் மகளோ பருவக் குமரி, உரிய பருவத்தில்
திருமணம் செய்து கொடுப்பது பெற்றோர் நியதி
தந்தை மறந்துவிட்டீர்களா? மனைவியின் ஆதங்கம்,
மனதிலோ அழகியின் தாய் என்ற பேரின்பம்

மந்திரத்தால் உருமாற்றி சுந்தரியாய் மகளைப் பெற்றேன்,
கண்டு காளையர் நெஞ்சங்கள் காதல் வசப்பட,
கன்னி உன்னைக் கன்னிகாதானம் செய்ய
சுயம்வரத்திற்கு இதோ ஏற்பாடு செய்கிறேன்

மனதிற்குகந்த மணாளனுக்கு மாலையிட்டு மகளே நீ
மங்கலத்தோடு பல்லாண்டு வாழ பெற்றோர் செய்த
ஏற்பாடு சுயம்வரம்-மகளே உன் முடிபே எம் முடிபு,
சுயம்வரமே பெண்ணியச் சுதந்திரம் மாறாத நிலைப்பாடு

பூரித்த தந்தை உள்ளம்-புது மணப் பெண்ணாய்
மகளைக் காண சுயம்வரத்திற்கு ஏற்பாடு செய்து
சூரியனை மணவாளனாய் கொள்ள அழைத்த தினம்
முனியின் சாபத்திற்கஞ்சி முகம்மலர வந்த சற்குணம்





சுந்தர ஒளியோடு சூரிய பகவானின் மாட்சி
கண்ட சுந்தரி விழிகள் கூசிட, வெம்மை தகித்திட
வருந்திய மங்கை, தகிக்கிறது மேனி, தந்தையே
இவர் வேண்டாம் பணிவோடு வேண்டிய மங்கை

கண்ணியத்தோடு சூரியனை வாழ்த்திய முனி, கூறுங்கள்
பகவானே உம்மிலும் வல்லவர் யாரோ? எம் மகளுக்கு
உகந்தவர் எவரோ?. என்னிலும் வல்லவர் கார்மேகம்,
என் முகம் மறைத்து ஒளியை தடுப்பவர் அவர் ஒருவரே

கார் மேகத்தை அழைக்க. கரிய நிறம்
உருவற்ற தோற்றம் மனதை வருத்த
இவரில்லை தந்தையே என் மணாளன்
மாலையிட விரும்பாத மங்கை மனம்



கார்முகிலை வாழ்த்திய முனி, கூறும்
உம்மிலும் வல்லவர் யாரோ? எம் மகளுக்கு
உகந்த மணாளன் எவரோ? என்னிலும் வல்லவர்
பகவான் வாயு, என்னை ஆட்டுவிப்பவர் அவரே

வாயு பகவான் தரிசனமாகிட
தென்றலில் மென்மை, புயலில் வன்மை
தோற்றத்தில் காணாத ஆளுமை-கண்ட
கன்னி மனதிலே வெறுமை



வாயு பகவானுக்கு நன்றி சொல்லிய முனி
கூறும் உம்மிலும் வல்லவர் யாரோ? கோதை
எம் மகளை மாலையிடத் தகுந்தவர் எவரோ?

மலையரசனே மாட்சி மிகுந்தவர், என் ஆட்சி
அவரிடம் செல்லாது, வளையாத வீரம்
யாருக்கும் தலை வணங்காத கௌரவம்
அவர் ஒருவருக்கே உண்டு

வானுயர்ந்த தோற்றம் கரடு முரடாய்
கறுத்த மேனி, மலையரசன் கண்டு
மகள் மனம் வருந்திட, புரிந்த தந்தை
மலையரசனைப் புகழ்ந்த மேன்மை



நன்றி, தங்கள் வரவிற்கு நன்றி
தங்களிலும் வல்லவர் யாரோ? தயை கூர்ந்து
கூறுங்கள், தகப்பன் கேட்கிறேன்



என்னிலும் வல்லவர் எலியரசன்
என்னைத் தோண்டித் துன்புறுத்தும்
வீரம் அவருக்கே உண்டு-குழியில்
வாழ்ந்தாலும் மலையில் வாழும் மாவீரன்

எலியரசனை அழைக்க வந்தவர் கண்டு
எந்திழையாள் நெஞ்சம் படபடக்க
நாணிய மேனியோ செவ்வானம்
நங்கை மனதிலோ காதலின் புது வசந்தம்

உள்ளம் காதல் சொல்ல, புது உதயம்
வந்ததென்று நெஞ்சம் கீதம் பாட
தன்னை மறந்த நங்கை, தந்தை, தாயையும்
மறந்து காதலாகி நின்ற மடந்தை



புறம் மாறினும் அகம் மாறாத எலியின்
சுபாவம்,எலியை மகவாக்கி வளர்த்தாலும்
சுபாவம் மாறவில்லை, எலியை, எலி விரும்புவது
இயற்கை, வலிய விதியை வெல்ல வழியில்லை

தவமும், மந்திரமும் செய்ய முடியாத விந்தை
மகள் சிந்தையோ மாறாத எலியான விந்தை
எலி மனம், எலியை நாட, ஏந்திழையாளுக்குள்
இருப்பது எலியே புரிந்த தந்தை



எலியின் உருமாற்றி, எழில் உருவளித்து
மாதா, பிதா, குரு, தெய்வமாய் வழிகாட்டியும்
மாறாத சுபாவம், இயற்கையோ ஆளும் பாவம்
சுயம்வரமோ முடிந்த நேரம்

மங்கையை மறுபடியும் எலியாய் மாற்றி
மணாளன் கையில் மகிழ்வோடு கொடுத்த தந்தை,
சௌபாக்கியத்தோடு என்றும் வாழ்க என வாழ்த்தி.
ஆனந்தக் கண்ணீரைத் துடைத்த தாய், தந்தை

மந்திரமும், தவமும் மாற்றியது தோற்றத்தை
மாறாத சுபாவத்தை மாற்ற மந்திரமுமில்லை
மாயமுமில்லை, என்றுமுள்ள மாறாத தர்மம்
பிரபஞ்சத்தை ஆண்டு நடாத்தும் பரப்பிரம்மம்



புறத்தோற்றம் மாறினும் அகத்தோற்றம்
மாறாத நங்கை, எழில் நங்கையாய் மாறினாலும்
மங்கைக்குள் வாழ்வதோ எலி சுபாவம்
என்றுமுள்ள தர்மமோ மாறாத சுபம்

நீங்கள் தெய்வங்கள்-அனைவரும்
உன்னதரின் புதல்வர்கள் (சங் 82:6)
தன் மெய்யியல்பை மறந்த மனிதன்,
அறிவுக்கனயைத் தேர்ந்து
ஆணவத்தால் தன்னை இழந்த புனிதன்

மனிதன் உலகமெல்லாம் ஆதாயமாக்கி கொண்டாலும்
தன்னை இழந்தால் என் பயன் கேட்கிறார் மனுமகன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-06-10-2024*